# ॥ निर्गुणमानसपूजा ॥

# நிர்குண மானஸபூஜா

(1)

अखण्डे सच्चिदानन्दे निर्विकल्पैकरूपिणि ।
स्थितेऽद्वितीयभावेऽपि कथम्पूजा विधीयते ॥

அகண்டேஸத்-சிதானந்தே நிர்விகல்பைகரூபிணி
ஸ்திதேடத்விதீய பாவேடபி கதம் பூஜா விதீயதே ॥

வேறுபாடு அற்ற ஒரே உருவமான முழு ஸத்-சித்-ஆனந்தம் என்ற நிலையில் இரண்டாவதொன்றில்லை என்ற அத்வைதபாவனையில் எதற்கு பூஜை செய்ய வேண்டும்?

(2)

पूर्णस्यावाहनं कुत्र सर्वाधारस्य चासनम् ।
स्वच्छस्य पाद्यमर्घ्यंच शुद्धस्याचमनं कुतः ॥

பூர்ணஸ்யாவாஹநம் குத்ர ஸர்வாதாரஸ்ய சாஸநம் ।
ஸ்வச்சஸ்ய பாத்யமர்க்யம் ச சுத்தஸ்யாசமநம்குத: ॥

பூர்ணமாயிருப்பதற்கு எதில் ஆவாஹனம் செய்ய முடியும்? எல்லாவற்றிற்கும் ஆதாரமான ஒன்றிற்கு ஓரிடத்தில் ஆஸனமா? மிகத்தூயதான ஒன்றிற்கு பாத்யமமோ அர்க்யமோ, ஆசமனமோ வேண்டாமே!

(3)

निर्मलस्य कुतः स्नानं वासो विश्वोदरस्य च ।
अगोत्रस्य त्ववर्णस्य कुतस्तस्योपवीतकम् ॥

நிர்மலஸ்ய குத: ஸ்நானம் வாஸோ விச்வோதரஸ்யச ।
அகோத்ரஸ்ய த்வவர்ணஸ்ய குதஸ்தஸ்யோபவீதகம் ॥

மலமே இல்லாததற்கு ஸ்நானம் வேண்டுமா? உலகையே உதரத்தில் கொண்டுள்ளதால் வஸ்த்ரம் தேவையில்லையே! கோத்ரம் வர்ணம் இல்லாத ப்ரஹ்மத்திற்கு உபவீதம்தான் எதற்கு?

(4)

निर्लेपस्य कुतो गन्धः पुष्पं निर्वासनस्य च ।
निर्विशेषस्य का भूषा कोऽलङ्कारो निराकृतेः ॥

நிர்லேபஸ்ய குதோகந்த: புஷ்பம் நிர்வாஸனஸ்யச ।
நிர்விசேஷஸ்ய கா பூஷா கோऽலங்காரோ நிராக்ருதே

பூச்சு ஏதும் (ஒட்டுதல்) இல்லாததற்கு ஏன் சந்தனப் வாஸனையில்லாததால் புஷ்பமும் தேவையில்லையே! சிறப் ஏதும் இல்லாத ஒன்றிற்கு பூஷணம் எதற்கு? ஆக்ருதி இல்லாததால் அலங்காரமும் தேவைப்படாது.

(5)

निरञ्जनस्य किं धूपैर्दीपैर्वा सर्वसाक्षिणः ।
निजानन्दैकतृप्तस्य नैवेद्यं किंभवेदिह ॥

நிரஞ்ஜனஸ்ய கிம்தூபை: தீபைர்வா ஸர்வஸாக்ஷிண:
நிஜானந்தைகத்ருப்தஸ்ய நைவேத்யம் கிம்பவேதிஹ

நிரஞ்ஜனம் என்பதால் தூபமும், எல்லாவற்றிற்கு ஸாக்ஷியாய் இருப்பதால் தீபமும், ஆத்மானந்தம் ஒன்றிலே திருப்தி கொண்டுள்ளதால் நைவேத்யமும் எதற்கு?

(6)

विश्वानन्दयितुस्तस्य किं ताम्बूलंप्रकल्पते ।
स्वयम्प्रकाशचिद्रूपो योऽसावर्कादिभासकः ॥

விச்வாநந்தயிது ஸ்தஸ்ய கிம் தாம்பூலம் ப்ரகல்பதே ।
ஸ்வயம் ப்ரகாசசித்ரூபோ யோऽஸா வர்காதி பாஸக: ॥

உலகையே மகிழ்வில் திளைக்க வைப்பதால் அதற் தாம்பூலம் எதுவாகும்? தன்னைத்தானே பிரகாசிக்கச் செய்யு ஞான ரூபமாயும், சூர்யன் முதலியோரை கூட விளங்கும்ப செய்யும் அந்த ப்ரம்மம் -

(7)

गीयते श्रुतिभिस्तस्य नीराजनविधिः कुतः ।
प्रदक्षिणमनन्तस्य प्रणामोऽद्वयवस्तुनः ॥

கீயதே ச்ருதிபிஸ்தஸ்ய நீராஜன விதி: குத: ।
ப்ரதக்ஷிண மநந்தஸ்ய ப்ரணாமோணுத்வய வஸ்துந: ॥

வேதங்களால் போற்றப்படுகிறதே அதற்கு நீராஜனமும் வேண்டுமா? இவ்வளவு - அவ்வாளவு என்றில்லாத ஒன்றிற்கு பிரதக்ஷிணம் எப்படியோ? இரண்டாவதே இல்லையென்ற பொழுது நமஸ்காரம் யாருக்கு?

(8)

वेदवाचामवेद्यस्य किं वा स्तोत्रं विधीयते ।
अन्तर्बहिस्संस्थितस्य उद्वासनविधिः कुतः ॥

வேத வாசாமவேத்யஸ்ய கிம்வா ஸ்தோத்ரம் விதீயதே ।
அந்தர் பஹிஸ் ஸம்ஸ்திதஸ்ய உத்வாஸந விதி: குத: ॥

வேத வாக்யங்களை கொண்டே அறிய முடியாததை எப்படி ஸ்தோத்ரம் செய்வது? உள்ளும், புறமும் எங்கும் உள்ளதை எங்கிருந்து எங்கே உத்வாஸனம் (இடப்பெயர்ச்சி) செய்து ஒதுக்க முடியும்?

(9)

आराधयामि मणिसन्निभमात्मलिङ्गं
मायापुरीहृदयपङ्कजसन्निविष्टम् ।
श्रद्धानदीविमलचित्तजलाभिषेकै -
र्नित्यं समाधिकुसुमैरपुनर्भवाय ॥

ஆராதயாமி மணிஸந்நிப மாத்ம லிங்கம்
மாயாபுரீ ஹ்ருதய பங்கஜ ஸந்நிவிஷ்டம் ।
ச்ரத்தாநதீ விமலசித்த ஜலாபிஷே கை:
நித்யம் ஸமாதிகுஸுமை ரபுனர் பவாய ॥

மணிக்கு (வைரம் முதலிய) ஒப்பான ஆத்மலிங்கத்தை மாயாபுரியில், ஹ்ருதயத் தாமரையில் அமர்த்தி, சிரத்தையாகிய நதியிலிருந்து, மாசில்லாத சித்தமாகிய ஜலத்தைக் கொண்டு அபிஷேகம், ஸமாதியாகிய புஷ்பங்களால் நிதமும் பூஜையும் செய்கிறேன். எதற்கு என்றால் மறுபிறவி இல்லாதிருக்கவே.

**(10)**

अयमेकोऽवशिष्टोऽस्तीत्येवमावाहयेच्छिवम् ।
आसनं कल्पयेत्पश्चात् स्वप्रतिष्ठात्मचिन्तनम् ॥

அயமேகோऽவசிஷ்டோ ऽஸ்மீத்யேவ
மாவாஹயேத்சிவம் ।
ஆஸனம் கல்பயேத்ப ஸ்சாத்ஸ்வ ப்ரதிஷ்டாத்ம
சிந்தனம் ॥

'இதோ ஆத்மா ஒன்றே பாக்கியாகியுள்ளது' - என்று சிவனை ஆவாஹனம் செய்யலாம். தனக்குதானே நிலை நின்றுள்ள ஆத்மாவை சிந்திப்பதே ஆஸனம் செய்வதாக பாவிக்கலாம்.

**(11)**

पुण्यपापरजस्सङ्गो मम नास्तीति वेदनम् ।
पाद्यं समर्पयेद् विद्वानू सर्वकल्मषनाशनम् ॥

புண்ய பாபரஜ: ஸங்கோ மம நாஸ்தீதிவேதனம் ।
பாத்யம் ஸமர்பயேத் வித்வான் ஸர்வ கல்மஷநாசனம் ॥

புண்யம், பாபம் இவற்றாலுண்டான ஸங்கம் ஆத்மாவுக்கு இல்லை என்று அறிவதான பாத்யத்தை விவேகியானவன் ஸமர்பிக்கலாம். அது ஸஞ்சிதம் - ஆகாமி பாபங்களை நீக்கும்.

**(12)**

अनादिकल्प-विधृत-मूलाज्ञान-जलाञ्जलिम् ।
विसृजेदात्मलिङ्गस्य तदेवार्घ्यसमर्पणम् ॥

அநாதி கல்பவித்ருத மூலாஜ்ஞான ஜலாஞ்ஜலிம்।
விஸ்ருஜேத் ஆத்மலிங்கஸ்ய ததேவார்க்ய ஸமர்பணம்॥

பண்டைய யுகங்களில் தொடர்ந்து வந்துள்ள அஜ்ஞானத்திற்கு ஜலாஞ்ஜலி விட வேண்டும். அதுவே ஆத்மலிங்கத்திற்கு ஸமர்ப்பிக்கும் அர்க்யம் ஆகும்.

(13)

ब्रह्मानन्दाब्धि–कल्लोल कणकोट्यंश–लेशकम्।
पिबन्तीन्द्रादय इति ध्यानमाचमनं मतम्॥

ப்ரஹ்மானந்தாப்தி கல்லோல கணகோட்யம்ச லேசகம்।
பிபந்தீந்த்ராதய இதி த்யான மாசமநம்மதம்॥

ப்ரம்மானந்தக் கடலின் அலைகளிலுள்ள கோடித் துளிகளில் ஒரு சிறிதளவு துளியே இந்த்ரன் முதலியோர் அனுபவிக்கின்றனர் என்று தியானித்தலே ஆசமநம் ஆகும்.

(14)

ब्रह्मानन्दजलेनैव लोकाः सर्वे परिप्लुताः।
अक्लेद्योऽयमिति ध्यानमभिषेचनमात्मनः॥

ப்ரஹ்மானந்தஜலேனைவ லோகா: ஸர்வே பரிப்லுதா:।
அக்லேத்யோSய மிதித்யானம் அபிஷேசன மாத்மந:॥

ப்ரம்மானந்தத் தண்ணீரால் தான் உலகமெல்லாம் நனைந்துள்ளன. ஆனால் இந்த ஆத்மா மட்டும் நனைக்கப்படாதது என்று தியானிப்பதே ஆத்மாவின் அபிஷேகமாகும்.

(15)

निरावरणचैतन्यं प्रकाशोऽस्मीति चिन्तनम्।
आत्मलिङ्गस्य सद्वस्त्रमित्येवं चिन्तयेन्मुनिः॥

நிராவரண சைதன்ய ப்ரகாசோऽஸ்மீதி சிந்தனம்।
ஆத்மலிங்கஸ்ய ஸத்வஸ்த்ர மித்யேவம்
சிந்தயேன்முநி:

மறைவுபடாத உள்ளுணர்வின் புற ஒளியாக (ஆத்மா நான் இருக்கிறேன் என்று நினைப்பதே ஆத்மலிங்கத்திற்கான நல்ல உடுப்பு என முனிவன் எண்ண வேண்டும்.

**(16)**

त्रिगुणात्माशेषलोक-मालिकासूत्रमस्म्यहम्।
इति निश्चयमेवात्र ह्युपवीतं परं मतम्॥

த்ரிகுணாத்மாசேஷ லோகமாலிகாஸூத்ர மஸ்ம்யஹம்
இதி நிஸ்சய ஏவாத்ர ஹ்யுபவீதம் பரம்மதம்॥

முக்குணத் தன்மையுள்ள அனைத்துலகமாகிய மாலையினூடே செல்லும் நூலாக ஆத்மா உள்ளது என்று நிச்சயித்தல்தான் சிறந்த உபவீதம் எனக் கருதலாம்.

**(17)**

अनेकवासनामिश्रप्रपञ्चोऽयं धृतो मया।
नान्येनेत्यनुसन्धानमात्मनश्चन्दनंभवेत्॥

அநேக வாஸநாமிச்ர ப்ரபஞ்சோऽயம்த்ருதோமயா।
நான்யேந - இத்யனுஸந்தானம் ஆத்மநஸ் சந்தனம்
பவேத்॥

பல வாஸனைகளுடன் பிசிரிக் கலந்துள்ள இந்த பிரபஞ்சத்தைத் தாங்குவது ஆத்மாதான் என்றும் வேறு எவரும் இல்லை என்றும் தொடர்ந்து எண்ணுதல் ஆத்மாவுக்கு சந்தனமாகும்.

**(18)**

रजःसत्त्वतमोवृत्तित्यागरूपैस्तिलाक्षतैः।
आत्मलिङ्गं यजेन्नित्यं जीवन्मुक्तिप्रसिद्धये॥

ரஜஸ்ஸத்வதமோ வ்ருத்தித்யாக ரூபை: திலாக்ஷதை: ।
ஆத்மலிங்கம் யஜேந்நித்யம் ஜீவன்முக்தி ப்ரஸித்தயே ॥

ரஜஸ் - ஸத்வம் - தமோகுணங்களின் செயல்பாடுகளை விட்டொழித்தலான திலம் அக்ஷதை இவற்றால் தினந்தோறும் ஆத்மலிங்கத்தை வழிபட வேண்டும். அது ஜீவன் முக்தி கிடைப்பதற்கு ஹேதுவாகும்.

(19)

ईश्वरो गुरुरात्मेति भेदत्रयविवर्जितैः ।
बिल्वपत्रैरद्वितीयैरात्मलिङ्गं यजेच्छिवम् ॥

ஈச்வரோ குரு ராத்மேதி பேதத்ரய விவர்ஜிதை: ।
பில்வ பத்ரைரத்விதீயை ராத்மலிங்கம்யஜேத் சிவம் ॥

ஈச்வரன், குரு, ஆத்மா என்ற மூன்று வேறுபாடில்லாத ஒவ்வொரு பில்வ பத்ரங்களால் ஆத்மலிங்கமாகிய சிவனை அர்சிக்க வேண்டும்.

(20)

समस्तवासनात्यागं धूपं तस्य विचिन्तयेत् ।
ज्योतिर्मयात्मविज्ञानं दीपं सन्दर्शयेद्बुधः ॥

ஸமஸ்த வாஸநாத்யாகம் தூபம் தஸ்ய விசிந்தயேத் ।
ஜ்யோதிர்மயாத்ம விஜ்ஞானம் தீபம் ஸந்தர்சயேத் புத: ॥

எல்லாவித வாஸனைகளையும் விட்டொழித்தலே ஆத்மாவுக்கு தூபம் காட்டுதல் என எண்ண வேண்டும். ஒளி மயமான ஆத்மாவை நன்கறிதலே தீபம் காட்டுவது என்றும் எண்ண வேண்டும்.

(21)

नैवेद्यमात्मलिङ्गस्य ब्रह्माण्डाख्यं महोदनम् ।
पिबानन्दरसं स्वादु मृत्युरस्योपसेचनम् ॥

நைவேத்ய மாத்மலிங்கஸ்ய பிரஹ்மாண்டாக்யம்
மஹௌதனம்
பிபானந்த ரஸம் ஸ்வாது ம்ருத்யுரஸ் யோபஸேசனம் ॥

ஆத்மலிங்கத்திற்கு ப்ரஹ்மாண்டமே மஹா நைவேத்ய மாகிறது. ஆனந்தமே ரசமாகவும், ம்ருத்யுவே ஊறுகாயாகவும் ஆகிறது.

(22)

अज्ञानोच्छिष्टकरस्य क्षालनं ज्ञानवारिणा ।
विशुद्धस्यात्मलिङ्गस्य हस्तप्रक्षालनं स्मरेत् ॥

அஜ்ஞானோச்சிஷ்ட கரஸ்ய க்ஷாலனம் ஜ்ஞானவாரிணா।
விசுத்தஸ்யாத்ம லிங்கஸ்ய ஹஸ்தப்ரக்ஷால
நம்ஸ்மரேத்॥

அஜ்ஞானத்தினால் உச்சிஷ்டாசுசியை ஜ்ஞானமென்ற தண்ணீரால் அலம்புவது சுத்தமான ஆத்ம லிங்கத்திற்கு செய்யும் ஹஸ்த பிரக்ஷாலனமாகும்.

(23)

रागादिगुणशून्यस्य शिवस्य परमात्मनः ।
सरागविषयाभ्यासत्यागस्ताम्बूलचर्वणम् ॥

ராகாதி குணசூன்யஸ்ய சிவஸ்ய பரமாத்மந: ।
ஸராக விஷயாப்யாஸ த்யாக: தாம்பூல சர்வணம் ॥

ராகம் முதலிய குணங்களற்ற, மங்களகரமான பரமாத்மாவுக்கு ராகங்களோடு கூடிய உலக விஷயங்களை புழங்குவதை த்யாகம் செய்வதே தாம்பூல சர்வணமாகும்.

(24)

अज्ञानध्वान्तविध्वंसप्रचण्डमतिभास्वरम् ।
आत्मनो ब्रह्मताज्ञानं नीराजनमिहात्मनः ॥

அஜ்ஞானத்வாந்த வித்வம்ஸப்ரசண்ட மதிபாஸ்வரம் ।
ஆத்மநோ ப்ரஹ்மதாஜ்ஞானம் நீராஜனமிஹாத்மந: ॥

அஜ்ஞான இருளைப் போக்குவதில் தீவிரமான, சூர்ய னையும் விஞ்சிய ஆத்மாவுக்கு ப்ரஹ்மத் தன்மை உறுதியாக நம்புதல்தான் ஆத்மாவுக்கு நீராஜனம் காட்டுவதாகும்.

(25)

विविधब्रह्मसन्दृष्टिमालिकाभिरलङ्कृतम् ।
पूर्णानन्दात्मतादृष्टिंपुष्पाञ्जलिमनुस्मरेत् ॥

விவத ப்ரஹ்மஸம்த்ருஷ்டி மாலிகாபிரலங்க்ருதம் ।
பூர்ணானந்தாத்மதாத்ருஷ்டிம் புஷ்பாஞ்ஜலிமனு
ஸ்மரேத் ॥

பலவித ப்ரஹ்மங்களைக் காணுவதாகிய மாலைகள் அணிந்தாலும் பூர்ணானந்த - ஆத்மாவின் தர்சனமே புஷ்பாஞ் ஜலியாக கொள்ள வேண்டும்.

(26)

परिभ्रमन्ति ब्रह्माण्डसहस्राणि मयीश्वरे ।
कूटस्थाचलरूपोऽहमिति ध्यानम्प्रदक्षिणम् ॥

பரிப்ரமந்தி ப்ரஹ்மாண்ட ஸஹஸ்ராணி மயீச்வரே ।
கூடஸ்தாசல ரூபோऽஹம் இதி த்யானம் ப்ரதக்ஷிணம்॥

எல்லாம்வல்ல ஆத்மாவில் ஆயிரமாயிரம் ப்ரஹ்மாண் டங்கள் சுழலுகின்றன. அவற்றின் நடுவே மலையொத்தது ஆத்மா என்று தியானிப்பதே பிரதக்ஷிணமாகும்.

(27)

विश्ववन्द्योऽहमेवास्मि नास्ति वन्द्यो मदन्यतः ।
इत्यालोचनमेवात्र स्वात्मलिङ्गस्य वन्दनम् ॥

விச்வ வந்த்யோऽஹமேவாஸ்மி நாஸ்தி வந்த்யோ
மதன்யக:।
இத்யாலோசனமே வாத்ர ஸ்வாத்ம லிங்கஸ்ய
வந்தனம்॥

ஆத்மாதான் உலகத்தார் வந்தனம் செய்யத் தக்கது. ஆத்மாவை தவிர வேறு எவரும் வணக்கத்துக்குரியவரில்லை என்று நினைப்பதே ஆத்ம லிங்கத்திற்கு வந்தனமாகும்.

**(28)**

आत्मनः सत्क्रिया प्रोक्ता कर्तव्याभावभावना ।
नामरूपव्यतीतात्मचिन्तनं नामकीर्तनम् ॥

ஆத்மந: ஸத்கிரியா ப்ரோக்தா கர்தவ்யாபாவ பாவநா।
நாமரூப வ்யதீதாத்ம சிந்தனம் நாமகீர்தநம்॥

வேறு ஏதும் செய்ய வேண்டியதில்லை என்று பாவிப்பதே ஆத்மாவுக்குச் செய்யும் ஸத்காரம். நாமம், ரூபம் இவற்றிற்கு அப்பாற்பட்ட ஆத்மாவை சிந்திப்பதே நாம கீர்த்தனமாகும்.

**(29)**

श्रवणं तस्य देवस्य श्रोतव्याभावचिन्तनम् ।
मननं त्वात्मलिङ्गस्य मन्तव्याभाव चिन्तनम् ॥

ச்ரவணம் தஸ்ய தேவஸ்ய ச்ரோதவ்யா பாவசிந்தனம்।
மநநம் த்வாத்மலிங்கஸ்ய மந்தவ்யாபாவ சிந்தனம்॥

வேறு காதால் சிரவணம் செய்யத் தக்கதில்லை என்று எண்ணுவதே அந்த கடவுளுக்கு ஏற்ற சிரவணமாகும். ஆத்ம லிங்கத்தை மனனம் செய்வதன்றி வேறெதையும் மனனம் செய்யாதிருத்தலே மனனம் என்றதாகும்.

(30)

ध्यातव्याभावविज्ञानं निदिध्यासनमात्मनः ।
समस्तभ्रान्तिविक्षेपराहित्येनात्मनिष्ठता ॥

த்யாதவ்யாபாவ விஜ்ஞானம் நிதித்யாஸனமாத்மந: ।
ஸமஸ்த ப்ராந்திவிக்ஷேப ராஹித்யேநாத்ம நிஷ்டதா ॥

வேறு தியானம் இல்லை என்று உறுதியாக அறிவதே நிதித்யாஸனமாகும். எல்லாவித மயக்கம், இன்னல்கள் இல்லா திருத்தலே ஆத்மாவில் நிலைத்திருத்தலாகும்.

(31)

समाधिरात्मनो नाम नान्यच्चित्तस्य विभ्रमः ।
तत्रैव ब्रह्मणि सदा चित्तविश्रान्तिरिष्यते ॥

ஸமாதிராத்மநோ நாம நான்யத் சித்தஸ்ய விப்ரம: ।
த த்ரைவ ப்ரஹ்மணி ஸதாசித்த விச்ராந்திரிஷ்யதே ॥

ஆத்மாவை தவிர வேறு சித்த விப்ரமம் இல்லா திருத்தலே ஆத்ம ஸமாதியாகும். இவ்வாறு ப்ரஹ்மத்தில் சித்தலயம் வேண்டும்.

(32)

एवं वेदान्तकल्पोक्तस्वात्मलिङ्गप्रपूजनम् ।
कुर्वन्ना मरणं वापि क्षणं वा सुसमाहितः ॥

ஏவம் வேதாந்த கல்போக்த ஸ்வாத் மலிங்கப்ரபூஜநம் ।
குர்வன் ஆமரணம் வாபி க்ஷணம்வாஸுஸமாஹித: ॥

இவ்வாறு வேதாந்தமென்ற கல்பசூத்ரத்தில் கூறியபடி ஆத்மலிங்க பூஜையை மரண காலம் வரை அல்லது ஒரு சில நிமிஷங்களாவது மனது அடக்கமுடையவனாகி செய்து வருபவன்.

(33)

सर्वदुर्वासनाजालंपदपांसुमिव त्यजेत् ।
विधूयाज्ञानदुः खौघं मोक्षानन्दं समश्नुते ॥

ஸர்வ துர்வாஸனாஜாலம் பதபாம்ஸுமிவ த்யஜேத் ।
விதூயாஜ்ஞானது:கௌகம் ப்ரஹ்மானந்தம்,
ஸமச்னுதே॥

எல்லாகெட்ட வாசனைகளையும் கால்தூசு போல விட்டொழித்து அஜ்ஞானத்தினால் உண்டான துன்பங்களனைத்தையும் உதறிக் களைந்தபின் மோக்ஷானந்தத்தை அனுபவிப்பான்.

**நிர்குணமானஸ பூஜை முற்றுப்பெறுகிறது**

